உ

சிவமயம்.

# பஞ்சதிகாரவிளக்கம்.

---

சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்த மூலமும்,

இதற்கு

வித்துவான்-காஞ்சீபுரம்

சபாபதிமுதலியாரியற்றிய

பொழிப்புரையும்

திருமயிலை

சுப்பராயஞானியாரால்

---

புங்கத்தூர்

ம. சபாபதிமுதலியாரது

கல்விவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

ரௌத்திரி ௵ - ஐப்பசி ௴.

IMS0083

பஞ்சதிகார விளக்கமென்றதனை புகல்குவன்-
பஞ்சதிகாரவிளக்கமென்றிந்நூலையென்னும்- ஆறா
வது செய்யுளிற்காண்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சகிருத்திய விளக்கம்

உரைநடை.

பரமசிவத்தினால் நடத்தப்பட்ட சிருஷ்டி திதி, சங்காரம் திரோபவம் அனுக்கிரகமென்னும் பஞ்சகிர்த்திய முறைமைகளைத்தெரிவிப்பதினால் இது பஞ்சகிருத்திய விளக்கமெனப் பெயர் கூறப்பட்டது.

பாயிரம்.

கடவுள்வணக்கம்.

காப்பு.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

முகமதியுங்கட்கடுவுங்களவளையு........ ... ...*
முத்தரியமுகபடாத்துப்.......................*
புகர்மதமாமழகளிறுங்கரமலர்க்கற்'... ...... ...*
பகருவும்பொருவில்பாதத்...... ..........*

திகழுருபங்கயநிதியுந்தோன்றுபணைப்...... ...*
பாற்கடலிற்சிறந்துதோன்றும்... .........*
உகலருளைமங்கரவமுதையுளங்குளிரப்...... ......*
பூரித்தேபுவகைபூப்பாம்...... ...... ......*

(இதன்பொருள்)

முகமாகிய சந்திரனும் கண்ணாகியவிஷமும் க
ண்டமாகியசங்கநிதியும்உத்தரீயமென்னும்முகபடா
மணிந்த தனமாகிய புகர்முகமுள்ள இளமைதங்கிய
மதத்தபெரிய யானையும் திருக்கரமலராகியகற்பக
தருவும் ஒப்பில்லாத திருவடியாகிய விளங்குகின்ற
பதுமநிதியும் தோன்றியபராசத்தியென்னுந் திரு
ப்பாற்கடலிற் சிறந்துதோன்றிய கெடுதலில்லா
தஐங்கரமுள்ள விநாயகமூர்த்தியாகிய அமுர்தத்
தை எமதுள்ளங்குளிரும்படிபூரித்துச் சந்தோஷ
த்தை அடைவாம் - என்க.

பராசத்தியைப் பாற்கடலென உருவகப்படுத்தி
க்கூறினமையின்-முன்பாற்கடலினிடத்துச் சந்திர
ன்விஷம்- சங்கநிதி - பதுமநிதி - யானை-கற்பகம்-
அமிர்தம் -என்றயிவைகள் தோன்றின முறைமை
யைப்போலக்கண்டுக்கூறியபாற்கடலினிடத்தும்அப்
பொருள்கள் தோன்றுகின்றனவென்றுகூறினார்.

கண்டம் - சங்கம்போல்வதாதலின் - அதனைச்சங்குதிதியென்றும் - பாதம் - பதுமம்போல்வதாதலின் - அதனைப் பதுமநிதியென்றும் - தனம்யானைமத்தகம்போல்வதாதலின் - அதனை யானையென்றுங்கூறினர்-இவைபண்புவமம் - திருக்கரமும் - திருவடியும் - அன்பர்களுக்குவரம் அருள்வனவாதலின் கற்பகம் பதுமநிதியென்றும்-விநாயகர் - சிந்திக்கும் அடியார்களுக்கு -சனனமரணங்களை நீக்குகின்றவராதலின் - அவரை அமுதமென்றும்-பராசத்தியார் தொண்டர்களுக்கு -இகமுத்தரார்த்தபரபோகங்களைத்தருகின்றவராதலின் அவரைப்பாற்கடலென்றுங்கூறினூர்-இவைதொழிலுவமம்-தனம்- உவம ஆகுபெயர்.

## நடேசர்துதி.

### எண்சீர்க்கழிநெடில்

பெருங்கருணைக்கடறதம்பித் திருவுருவந்தரித்துப் *
பேசருமாசான்மறைந்தவாருயிரைமெலித்த *
இருங்பகம்சேர்விஞ்ஞானகலராதிமுவ ..... .. *
ரொனத்தொகுத்துத் தனுவாதியிந்தருமமாயை
யினில், வருஞ்சகலர்க்கிருவினைபொப்பாகிமலபா
கம் -வருவித்துத்திருவடிக்கிழ்வைப்பான்மன்றக
த்து.ளருங்கருணைபத்தொழிற்கூத்தாடியிசைபாடிக-
ளகமலத்தொளிவளரக்கருதியிருத்துவோம்...*

(இ-ள்) உயிர்களை முத்தியில்விட வேண்டுமென்று நிறைந்தகடல்போன்றபெரிய கருணையாகிய திருமேனிகொண்டு சொல்லுதற்கரிய ஆணவமலத்தினால் மறைபட்டிருந்த உயிர்களை அதினின்றெடுத்துப் பெரியபுகழ்சேர்ந்த விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் எனமூன்றுவகையாகத் தொகுத்துத் தனுகரணபுவன போகங்களைக் கொடுத்தருளி அம் மூன்றுவகை யுயிர்களுள் - ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களுடன் தோன்றிய சகலர்களுக்கு நல்வினைதீவினையென்னும் இருவினைகளைச் சமப்படுத்தி மலபரிபாகம் வருவித்துத் தமது திருவடியின்கீழ்வைத்தருளுகின்றவரும் சிற்சபையினிடத்து அரிதாகிய திருவருளினால் பஞ்சகிர்த்திய நடனஞ்செய்தருளுகின்றவருமாகிய நடேசமூர்த்தியின் திருவடிகளை எமது இருதயமாகியதாமரைமலரில் ஒளியுடன் வீற்றிருக்கும்படி தியானஞ்செய்திருத்துவாம் - என்க.

## சிவகாமியம்மைதுதி.

மலர்விரையுங்கதிரொளியுமுயிருடலுமணியின் ...*
வளர்தேசுமுருநிழலுமவிபொருளோடுரையு...*
நிலவுதல்போனிட்களத்தைப்பிரியாதுமருவி ...*
நிகழ்சகளத்தப்பதிக்குநிறைமனையாய்மன்னி. *

யுலகுயிர்மைந்தர்கள்பிறவிப்பசிகெடவெந்நாளு *
மோவாதானந்தவமுதூட்டியவ்வீட்டிருத்துந் *
திலகநுதற்சிவகாமசுந்தரியார்பாதச்...... ......*
செங்கமலந்தலைமீதிற்றிகழுறவைத்திடுவாம்... *

(இ-ள்)மலரும்வாசனையும் சூரியனும் ஒளியும் உடலும் உயிரும் ரத்தினமும் ஒளியும் உடலும்சாயையும் சொல்லும் பொருளும்பிறிவில்லாமல்விளங்குவதுபோல நிட்களசொரூபத்தைப் பிறியாமல் அபின்னசத்தியாகப்பொருந்தி - விளங்குகின்ற சகளரூபத்தில் அந்தச் சிவத்திற்குத் தேவியாய் நிலைபெற்று உலகத்திலிராநின்றஉயிர்களாகிய மைந்தர்களுக்குப்பிறவி யென்னும் பசியானதுகெட எந்நாளும் ஒழியாத ஆனந்தவமுதூட்டி அந்தமோக்ஷவீட்டில் நிலையாயிருக்கும்படி அருள்கின்ற திலகமணிந்த நெற்றியினையுடைய சிவகாமசுந்தரியின் திருவடிகளாகிய செந்தாமரை மலர்களை எம்முடையசிரசின்மேல்விளங்கும்படி சூட்டிக்கொள்ளுவோம் - என்க. (௪)

விநாயகர் துதி.

கவுட்குழிமாமதகுநிறந்தருண்மதநீர்ப்பாய்ச்சிக் *
கருதுறுமெய்யடியருளப்புலத்தஞ்சக்கரமா. *
நவப்பெருவித்திட்டதனினெழுமன்பாமுளையை 3
நசைவிடயக்கிளிகணறுக்காதவகைகாத்திங் *

சவக்களைகட்டருள்ஞானப் பயிரேற்றியென்று *
மியானெனுமாணவ வேழம ணுகாது காத்தி *
யுவப்புறமெய்ச்சிவபோகம் விளைவிக்குங்களிற்றை
யுளமவுனக்கூடத்திற்பிறிவறவைத்திடுவாம் ...*

(இ-ள்)சவுட்குழியாகியபெரியமதகினைத்திற
ந்து திருவருளாகிய மதநீரைப்பாய்ச்சித் திரியாழி
க்காநின்ற உண்மையடியார்களுடைய இருதயமா
கியநிலத்தில்பஞ்சாக்ஷரமாகிய புதியபெருவிதை
யைநாட்டி அதில்நின்றுமேலெழுந்த அன்பாகி
யமுளையைவிருப்பமுள்ள விடயமாகிய கிள்ளைக
ளநறுக்காதவண்ணங்காத்து அவமாகிய பயனில்
முயற்சியென்னுங் களைகளைப்பறித்து அருளாகி
யஞானப்பயிரை விருத்திசெய்து யானெனதெ
ன்கிற தற்போதமாகிய யானையானது,என்றும்அந்
தப்பயிரினிடத்துச் சேராதவண்ணம்காத்தி ஆன
ந்தமாகிய மிகுந்த சிவபோகமென்னும் பயிரை
விளைவிக்காநின்ற யானையைஉள்ளத்தில் நிலைத்த
மௌனநிலையாகிய கூடத்திலே நீங்குதலில்லாம
லிருக்கும்படி வைப்பாம் —எ-று. (௫)

இதன்தாத்பரியம்

பேரருளால் குருமூர்த்தமா யெழுந்தருளி
மெய்யடியாருக்குப் பஞ்சாக்ஷரோப தேசஞ்செ

ய்து நாமரூபமாகிய விஷயங்கள்வந்து தாக்காது திஷ்டைகூடவைத்து ஞானத்தை விர்த்தி செய்து யானெனதென்னுந் தற்போதத்தைநீக்கிச் சிவபோகந் தந்தருளுகின்ற ஞானமாகிய யானைமுகமுள்ள விநாயகமூர்த்தியைத்தியானிக்கிறோம் என்பதாம்.

விநாயகர் திருவவதாரஞ் செய்தபோது பரமசிவம் அவ்விநாயகனைநோக்கித் தேவர்கள்முதலியயாவரும் யாதொரு சுபகாரியங்கள்செய்யத்தொடங்குவார்களானல் உன்னைத் துதிசெய்து தொடங்குவராயின் அக்காரியம் இனிது நிறைவேறுமென்று ஆக்கியாபித்தருளிய முறைமைபற்றி முன்னந்துதிசெய்து சுவாமி அம்மை விநாயகர் சுப்பிரமணியசுவாமி என்னுங்கிரமங்கொண்டு மீட்டும் விநாயகனைத்துதிசெய்வது சைவசமய சம்பிரதாயம்.

சுப்பிரமணியசுவாமிதுதி

கனைகடலின்முடிமீதிற் சுடர்விடுஞாயிறுபோற் *
கடிநீலக்கலபமயிற்றுரகமிசைத்தோன்றி ... *
வனசரர்தந் தருண்மானுங்கடவுளர்கோனுதவு *
மாதவயானையுமிருபான் மன்னுறவெற்நானு *
நினையடியார்பவநோயிற் சாராமற்காத்து... ...*
நிறைசுகபூரணவா ரிகுறைவறவேயுதவும், புனே

மலர்நீபத்தொடையானூபுரமாமுளரிப், பொன்ன
டியென்சென்னியிலும்புந்தியிலும் வைப்பாம்.

(இ-ள்) ஒலிக்காநின்ற சமுத்திரத்தின் முக
ட்டினிடத்தில் ஒளிவிட்டுதயமாகாநின்ற சூரியனை
ப்போல-விளங்குகின்றநீலநிறம்பொருந்திய தோ
கையையுடைய மயில்வாகனத்தின்மேல் வேடர்க
ள்கொடுத்த தவமுள்ளவள்ளியம்மையும் தேவேந்
திரன்தந்த பெரியதவமுள்ள தெய்வயானையம்மை
யும் இருபக்கத்திலும் நிலைபெற்றிருக்கும்படிதோ
ன்றி எந்நாளுஞ்சிந்திக்காநின்ற அடியவர்கள் பிற
விநோயிற்சாராமற்காத்து நிறைந்த பூரணமாகிய
சுகவெள்ளத்தைக் குறைவற அருளிச்செய்கின்ற
கடப்பம் பூமாலையணிந்த சுப்பிரமணியசுவாமியி
னுடைய நூபுரமணிந்த செந்தாமரை மலர்போ
ன்ற பொலிவினையுடைய திருவடிகளை எம்முடை
யசிரசிலும் இருதயத்திலும் வைப்பாம்-என்க. (சா)

தோன்றிக்காத்துஉகவும் நீபத்தொடையான்
என முடிக்க தாகம் என்பதனைப்பரியெனக்கொ
ண்டு அப்பரியைவாகனமென்று கொள்க. இதனை
ஆடும்பரிவேலணிசேவலெனஎன்பதனுனு முணர்க

வள்ளி தெய்வயானை யென்னும் - இவ்விர
ண்டு நாச்சிமார்களும் முன்னர் தவஞ்செய்து

சுப்பிரமணியக்கடவுள் திருமணங்கொள்ளப் பெற்றுக்கொண்டவர்களாதலால் - மாதவயானையென்றார் இதனால் வனசரர்தந்தருள் மான் என்றவிடத்தும் மாதவமான் எனக்கூட்டிப் பொருள்கூறப்பட்டது. இங்ஙனமன்றி வனசரர்தவப் பயனால் பெற்றமான் இந்திரன் தவப்பயனால் பெற்றயானை எனக் கூறினும் அமையும், சத்தியுடன் சேர்தலின்றிச் சிவத்துக்குயாதொரு கிருத்தியமும் நடவாதாகையால் வனசரர்தந்த மானும் கடவுளர்கோனுதவும் யானையுமிருபான்மன்னுறத் தோன்றி அடியார்பவநோய் சாராமற்காத்து என்றார். இதனைச் சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடுசேரி லெத்தொழிலும்வல்லதாம். என்பதனானும், கணகடவின்முடிமீது சுடர்விடுஞாயிறுபோற்றோன்றி என்பதனை, உலகமுவப்ப வலனேர்புதிரிதரு பலர்புகழ்ஞாயிறு கடற்கண்டா அங்கோவறவிமைக்குஞ்சேண்விளங்கவிரொளி என்பதனானும்முணர்க-யானையும் மன்னுறவென்றதனைச் சூரியனுங்கிரணமும் போலக்கொள்க. (எ)

## குருவணக்கம்.

ஐந்தொழிலினுலகத்தி யனுக்கிரகமொன்று ...*
மருளுடனேகொண்டுபர திருஞானவடிவாய், *

வந்தருளித்திவகந்தாற்பறவையகப்படுத்து... .. *
மாறதும்பானுமேயேனேவழியடிமைகொண்டு ...*
சிந்தைதனிற்சிவஞானப் பேரொளியைக்காட்டித்*
திரிமலவல்லிருடேரந்து சிற்சுகத்தேவைக்கும் *
நந்துலவுநதிபுடைசூழ்முதுகிரிவாழ்குமர... ...*
நாயகனைத்தூயவுளத்தேமிகவைத்திடுவாம் ...*

(இ-ள்) பஞ்ச கிருத்தியங்களுக்குள் நான்கு கிருத்தியங்களை நீக்கி அனுக்கிரக மென்கிறவொருகிருத்தியத்தை அருளுடனே கொண்டுதிருப்பரஞானவடிவான குருமூர்த்தமாயெழுந்தருளிப் பார்வையினால்பக்ஷிமுதலிய மிருகங்களைவேடர் அகப்படுத்துமாறுபோலநாயேனைவழியடிமை கொண்டு அடியேன் சிந்தையில் சிவஞானமாகிய பெரிய சோதியைக் காட்டிமும்மல மாகிய வலிய இருளைத்தூரந்து ஞானசுகத்தில் வைத்தருளிய-சங்கங்களுரும்படியான மணிமுத்தாநதி புடைசூழ்ந்த விருத்தாசலத்தில் வீற்றிருக்குங் குமாரதேவ சுவாமிகளை அடியேனது பரிசுத்தமான உள்ளத்தில் எந்நாளும் வீற்றிருக்கும்படி எழுந்தருளச் செய்வாம்.-என்க.

(அ)

பஞ்ச கிருத்தியங்களை நடத்தும் பரமசிவமேகாருணியத்தினால் மானிடச் சட்டை சாத்திக்

குருமூர்த்தமா யெழுந்தருளிய தென்பார். ஐந்
தொழிலில்நா லத்திறியனுக்கிரகமொன்று மருளு
டனே கொண்டு பரதிரு ஞானவடிவாய் வந்தருளி
யென்றும் குருமூர்த்தமா யெழுந்தளின அவ
சரத்தில் பக்குவாத்துமாக்களுக்கு ஞானோபதேச
ஞ் செய்தருளி ஆணவமலத்தைப் போக்கிப் பே
ரின்பத்தை அனுக்கிரகஞ்செய்யுந் தன்மையொன்
றனையே கொண்டிருந்தமையினல் அனுக்கிரக
மொன்று மருளுடனே கொண்டென்றும் திரு
வருளால் சத்திநிபாதம் பதிந்தபோதே சித்தசு
த்தி உண்டாயிருப்பது மன்றிஞானசாரியர் கிரு
பையினுல் மலரகிதமாயிருப்பதாதலாலும் தூயவு
ளமென்றுங்கூறினர். பார்வையாவது வேடர்வளர்த்
றுவைத்துக்கொண்டிருக்குபட்ட க்ஷிமுதலியவை.

அவையடக்கம்.

கருவிகளோராறுறுஞ் சடமாகுஞ் சீவன்.... ...*
கருதுறுதற்செயலாயொன்றறியா திங்கிவற்றை*
மருவியந்தச்சடசித்தோரிரண்டிற்குத்தொழிலு .*
மன்னறிவுந்தன்னருளால் வருவிப்பனிறைவன்*
புனையறவாகையினலவ் விறையருள்கொண்டடியே
ன், புகல்குவன் பஞ்சதிகாரவிளக்கமென்றிந்நூலை
ப்- பரவுரவோர்கொள் ளவுள்ளாரிதுவுமிறைவன்
பணியெனவே யெச்செயலும்பரஞ்செயலென்
றுணலால்.. ......................... ... ....................*

(இ ள்) முப்பத்தாறுதத்துவமும் சடமாகும் - சிவன்தன்செயலாய் ஒன்றையுமறியாது பரமசிவம் இவைகளைப்பொருந்தி அந்தச்சடசித்துகளிரண்டிற்கும் தொழிலும் அறிவும் குற்றமற்றதன்னருளால் வருவிக்கும் ஆகையால் அடியேன்பரமசிவத்தினருளினால் பஞ்சதிகாரவிளக்க மென்னும்இந்நூலைச்சொல்லுகின்றேன் அந்தப் பரமசிவத்தைத்துதிக்கின்றவர்கள் எல்லாச்செயலும் சிவன்செயலென்று உணர்கின்றமையால் இதுவுஞ்சிவன் செயலேயென்று ஏற்றுக்கொள்ளுவார்களே அல்லாமலிகழ்ச்சி செய்யார்கள் -என்க- எல்லாஞ்சிவன்செயலாகக் கண்டபெரியோர்கள் இந்நூலுஞ்சிவன்செயலால் இயன்றதென ஏற்றுக்கொள்வார்களென்பது கருத்து. (கூ)

(நூல்.)

திருவளருமொருவனொரு தொழில்புரியினதுதான்
 திகழ்தருதன்பயனயலார் பயனுடனப்பயனைக்*
கருதிவருமவையுட்டன்பயன் மும்மைத்தாகுங்...*
 கழறுமிடத்திடாகலிசுகமுறுதல்புகழை ...*
மருவுதலாய்வருமயலார்பயனருளைக்கருதி... ...*
 வந்திடுமப்பயன் விளையாட்டாகிவருமிவையுண்*
டிருமலினைத்தொழில்புரிதன்பயனேபிறர்க *
 ணேர்பயனேவப்பயனேநினைபுமிடத்தெனிலே.*

(இ-ள்.) சிறப்புமிகுந்த ஒருவன் ஒருதொ

ழிலைச்செய்யுமிடத்து அந்தத்தொழிலானது தன்ப
யனையும் அயலார்பயனையும் அவமாகியபயனையும் க
ருதிவரும் அம்மூன்றினுள்தன்பயனைச் சொல்லுமி
டத்து-இடர்நீங்குதல் சுகமடைதல் புகழ்பொருந்
துதல் எனமூன்றுவகையாகும். அயலார்பயன் அ
ருளைக்கருதிவந்திடும்- அவமாகிய பயன் விளையாட்
டாய்வரும். இவற்றுள் பரமசிவம் பஞ்சகிர்த்தியஞ்
செய்குதல் நினையுமிடத்துத்தன்பயனே அல்லது
பிறர்பயனோ அவமாகிய பயனோ என்றால்- என்க.

மலரகிதனுகையினலானந்தமயனாய்... ...... ...*
மன்னுறலாலொப்பார்மிக்கிலியாய்மன்னுறலால்,
நிலவுமிடரகலுதலுஞ்சுகப்பேறும்புகழும்... ...*
நேர்தரவேண்டாமையினேதன்பயனன்றாகு *
மிலகருள்பேரறிவுடையனுகலினல் விளையாட்-டெ
ண்ணியொரு தொழில்புரியானுதலினப்பயனன்,
றுலகுயிர்மேல்வைத்திடுபேரருளாலிங்கிறைவ ...*
னுறுதொழில்செய்குவ னிதைநீபிறர்பய னென்
றுணரோ..... ..........................................*

(இ-ள்.) பரமசிவன் மலரகிதனுகையாலும் ஆ
னந்தமயனாய் நிலைபெற் றிருப்பதினாலும் ஒப்பாரு
ம் மிக்காருமில்லாதவனாய்ப் பொருந்துதலாலும் வி

ளங்குகின்ற இடர்நீக்குதலும் சுகமடைதலும் புக
ழ் பொருந்துதலும் தனக்குமேநரும்படி விரும்பா
தவனைப்பாலும் தன்பமல்லவாகும் -பிறனைரக்ஷி
யாநின்றஅருளும் பேரறிவும் உடைய னுகையால்
விளைபாட்டைக்கருதி பொருந்தொழிலுஞ் செய்ப
வனல்லன் ஆனதால் அவனாகியபயனுமல்ல- உலக
த்துயிர்மேல் வைத்திடும் பேரருளாலிறைவன் ப
ஞ்சகிர்த்தியந்தனைச் செய்வன் ஆதலின் இதனைமாண
வகனேபிறர்பயனென்று கருதுவாயாக - என்ற. ய)

ஆருயிர்கட்டிறைதொழிலாலென்பயனிந்தகன்னி. ※
லவ்வுயிர்கட்கேரறிவுண்டாதலிடப்பவறிவுஞ்...... ※
சேர்வுறுநற்சொருபவறிவெனவுமவைதமைத் ※
தானவிருகூறாய்மூலஞ்சொல்லினாய்திங்கே ※
பேர்விடயாவாரகதற் சொருபாவாரகமென் ...※
றிவ்விருமலவ்வுயிர்களொன்னவருந்தமையுர். ※
தேர்வருமவ்விறைவனையுஞ்சிறிதுமறியாச் ...※
செய்திதனக்குறாதருமோர்திட்டாந்தங்கேள். ※

(இ-ள்.) நிறைந்த உயிர்களுக்குப் பரமசிவத்
திறுடைய தொழிலால் என்னபயனென்றால் அவ்
வுயிர்கட்கு விஷய அறிவென்றும் சோர்வற்றநல்
சொருப அறிவென்றும் இரண்டுவகையறிவுள்ள
அந்த இரண்டறிவையும் ஆணவமலமானது வி

டைய ஆவாரகமென்றும் நல்லசொரூப ஆவாரக மென்றும் இரண்டுகூறுகிச்சொல்லுதற்கரிதாய்நின் றுமறைத்கும் இந்தவிருளினுல் அவ்வுயிர்கள் கருத வருகின்ற தம்மையும்-தெரிதற்கரிய அந்தப்பரமசி வத்தையுஞ்சிறிதேனும் அறியாத - இந்தச்செய்திக் குச் சொல்லுகின்ற ஒருதிருஷ்டாந்தங்கேள்-என்க.

உறுமருளவ்விடத்தான்மூர்ச்சித்தயர்வுற்றிடவங் ※
கொருவன்மருந்தாலருள்கொண்டம்மூர்ச்சைநீக்
கிச், செறிமருளுக்கவுடதமுங்கொடுத்திவையுந்தீர்த்
துத்- திகழ்சுகமுற்றிடவைக்குந்திறமதுவேபோ
ல, அறைபிருளிற்செறிவுயிர்கட் குடன்முதலாமா
யை-யதனிடைதந்திருள்விடயாவாரகமுன்னீக்கி,
மறைகுருவாலனுபவத்தாற் சொரூபா வாரகமு ※
மாற்றியின்பந்தருமிறைவன்மாதொழிலாலதியே

(இ-ள்.) பொருந்திய பித்தமயக்குள்ளவன் வி ஷித்திருமேல மூர்ச்சித்துச் சோபம்பொருந்தியிரு க்கும் போது அங்கொருவன் வந்து அருளையுட் கொண்டு அவுஷதத்தினுல்அம்மூர்ச்சையைநீக்கிமு ன்னமிருந்தபித்தமயக்கத்திற்குந் தகுதியான அவு ஷதங்கொடுத்து அம்மயக்கத்தையுந்தீர்த்துச் சுகம் பொருந்தியிருக்கும்படிசெய்யுந் தன்மைபோலச் சொல்லுகின்ற அவ்விருளிற் பொருந்தியிருக்கும் உயிர்களுக்குச் சூக்ஷுமாதிபுவனபோகங்களை மாயை

யினிடமாகக்கொடுத்து இருளாகிய விடயவாவார கத்தை முன்னம்நீக்கிச் சுருதியினுலுங் குருவினுலு ம் அனுபவத்தினுலும் சொரூபவாவாரகத்தையுமா ற்றிச் சுகத்தைத்தந்தருள்வன் பஞ்ச கிர்த்தியத்தின லென்றுஅறிவாயாக-என்க. (மஉ)

உயிர்களுமோர்படித்தவைமூடாணவமோர்தன்மை
த்-துறுமிறையேகன்பக்கபாதமிலியானுற் .... *
செயிரறுவிஞ்ஞான கலர்க்குடலாதிதந்த.........*
செய்தியின்மற்றிருவர்க்குஞ்செய்தாலென்னொன்
னி,னியல்பொடுகண்களுமவைமூடும்படலந்தானு*
மிருந்திடவப்பிணிகுணகுற்றங்களை நன்கறிவோ
ன்,றயவொடுநன்மணிமருந்தாதியினுல்நீக்கிடுமால்.*
சாற்றியமூவகையாக்கித்தணிக்குமலமிறையே-*

(இ-ள்) உயிர்களும் ஒருதன்மையாயிருப்பது அவைகளை மறைக்கா நின்றஆணவஇருளானதுமொ ருதன்மையதாயிருக்கின்றது அவ்வாறிருக்கப்பரமசி வம் பக்ஷபாதமில்லாதவராளுல் குற்றமற்றவிஞ்ஞா னகலர்களுக்குஉடல் முதலானவைகளைத்தந்த தன் மையைப்போல் பிரளயாகலர் சகலர்என்னு மிவ்வி ருவர்களுக்குஞ்செய்தால் என்னகுற்றமெனவினுவு வையாயின் இயல்பானகண்களும் அவற்றை மூ டப்பட்ட படலமுமிருக்கு மாளுல் இயல்பானக ண்களைவிட்டு அந்தப்படலமாகிய பிணியின்குணக் குற்றங்களை நன்றறிகின்றவன் தயையினுல்மணியி

னாலும் நல்லமருந்தினாலும் ஊசியினாலும் படலத்தைநீக்குவான் அதுபோல உயிர்களைச்சொல்லுகின்ற மூன்றுவகையாகச்செய்து பரமசிவம் ஆணவவிருளைநீக்கும்.

படலத்தின் குணகுற்றங்களையறிந்து நீக்கத்தொடங்குகின்றவன் மணியினால் தீர்க்கத்தக்கபடலத்தை மற்றைய இரண்டினாலாவது மருந்தினால்தீர்க்கத்தக்கதை மற்றையஇரண்டினாலாவது ஊசியினால்தீர்க்கத்தக்கதைமற்றைய இரண்டினாலாவதுதீர்க்கக்கருதாது - அவற்றவற்றிற்குத்தக்க சிகிச்சைசெய்து தீர்க்கவேகருதுவன். அதுபோல உயிர்கள் மூன்றுவகையாயிருக்குந் தன்மையைப்பரமசிவம்உணர்ந்ததாகையால்அவைகளுக்குத்தக்க முறைமைப்படி ஆணவ மலத்தை நீக்குமென்றறிக என்க.

விஞ்ஞானகலர் ஆணவமென்னும் ஒருமலமும்- பிரளயாகலர் ஆணவங்கன்மமென்னும் இரண்டுமலமும் - சகலர் ஆணவம்கன்மம் மாயையென்னும் மூன்றுமலங்களையும் உடையவர்கள் - இவைகளைக்குறித்து இன்னமும்முன்னெடுதப்புகின்றெருகும்

ஐந்தொழிலாவனவேதென்றிடிலவைதாஞ்சிருட்டி *
யாதிதிசங்காரந்திரோபாவத்துடனே... .. *

வந்திலதுமனுக்கிரகமென்றாமச்சிருட்டி....... *
மாயையினிற்றனுகரணபுவனமுடன்போகத் *
தற்றிடலாந்தனுவெண்பத்தொருநால்கொடுற்ற *
தருநூறாயிரம்பேதஞ்சாற்றியவக்கரணம்...... *
தந்துமுயிர்க்கரணம்வித்தியாகரணமுடனே ... *
தற்சிவமாகரணமெனநன்னூறாமிங்கிவையுள். *

இதுபஞ்சகிருத்திய மிவையெனவுணர்த்துகி ன்றது.

(இ-ள்) பஞ்சகிர்த்தியங்களானவை யெவையெ னில் அவைகள் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் திரோ பவம் இவைகளுடன் முறைபாகவந்துவிளங்குகின் ற அநுக்கிரகம் என்று சொல்லப்படும். அவைகளு ள் சிருஷ்டியாவது மாயையினாலே தனுகரணம் பு வனம் போகம் என்பவைகளைக் கொடுப்பதாம்- இ வைகளுக்குள் தனுவானது எண்பத்துநான்குலக்ஷ பேதமாகச் சொல்லப்படும் - கரணமானது சீவகர ணம் வித்தியாகரணம் சிவகரணமெனப் பொருந் தும் - இவைகளுக்குள்-என்க. (௰௯)

சிவனிடக்கரணம்பிடயாதிகளோத்தேருந் . ... *
திமைதுவாய்வித்தியாகரணத்தின் முறைசெப்பி
லோயதுபோகத்தப்பத்திரிகாலமாபு...... ...*
முதுபோகம்விளைட்டிநிறவாவதாயும்....... *

நாசிலுயிர்க்குக்கிரியையறிவிச்சையெழுப்புஞ் *
    சார்பாயும்விடயத்திற்றங்குகறங்கொப்ப.....*
மேவியியக்குதலாயும்விடயந்தாமென்ன ... ...*
    வேறறமால்தரலாயும்விளங்குமாசெம்மே *

இதுமேற்கூறிய கரணங்களின் செய்கைகளை வகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) சிவனிடத்துண்டாகிய கரணமானது விஷயாதிகளையறியுந் தன்மையை யுடையதாம்-வித்தியாகரணத்தின் முறைமையைச் சொல்லுமிடத்து ஒழிவில்லாதபோகங்களைச் சீவன்அனுபவிக்க மூன்றுகாலமாயும் பொருந்தியபோகங்களை வினைகளுக்கு ஈடாகஅளவிடுவதாயும்கெடுதலில்லாதவுயிர்கட்குக்கிரியை- அறிவு- இச்சை -என்னும் இம்மூன்றையும் எழுப்புகின்ற சார்பாயும் விஷயத்தில் காற்றாடிக் கொப்பாக இயங்கச் செய்வதாயும் விஷயமென்றுந் தானென்றுஞ் சொல்கின்ற வேற்றுமை மயக்கத்தைத் தருவதாயும்விளங்கும்- என்க. (௪௯)

வித்தியாதத்துவமாவது-காலம் - நியதி- கலை வித்தை - ராகம்- புருடன்- மாயை- என ஏழாம்.

மன்னியநற்சிவகரணம்வித்தியாகரணத்தை... ...*
    மருவிநடத்தும்புவனமிருநூற்றிருபாலுள் ,. *

ருன்றுறுபோகஞ்சிவிகைகவிகைபரிகரிதே......௦
ருயர்கலையாதிகள்கந்தஞ்சடுரசமாந்தொகுதி *
நன்னுருபல்லுருவங்கள்வனிதாதிபரிசந் ... ...*
தோத்திரஞ்சோதிகளாமற்றிவை யுட்டனுவைப் *
பன்னுமுறுகரணத்தையானெனவொண்புவனம் *
பரர்போகமெனவென்வாருயிர்கருதவைத்தே *

இது சிவகரணத்திற்செய்கைகூறுகின்றது.

(இ-ள்) பொருந்திய நல்ல சிவகரணமானது சித்தியாகரணத்தைப் பொருந்திமருவி நடத்தும் புவனம் இருநூற்றிருபத்துநாலு என்பவைகளாம் கருதுகின்ற போகமானது சிவிகைகுடை குதிரை யானை தேர் உயர்ந்தவஸ்திர முதலானவைகளும்வா சனைதிரவியம் அறுசுவைவர்க்கம்- பொருந்திய பல வுருவங்கள் மாதர்முதலாகிய பரிசங்களும் சொல் லுகின்ற தோத்ரமுதலானவைகளுமாம் இவைகளுக்கு ள் சரீரத்தையும் சொல்லுகின்ற கரணத்தையும் யா னென்றும் புவனபோகத்தை யெனதென்றும் உ யிர்கள் கருதும்படிவைத்து-என்க. (௰௫)

கதுய்பத்தப்பித்தித்திதியாகுமுயிர்க்குத்......*
தோற்றிய நிவல்லாமொடுக்கல்சொல்லுறுசங்கார
மிதுசிருட்டிதிதிசங்காரத் தழன்றுமிடனா......*
வெறுக்கா தருசிப்பித்தல்விளம்புதிரோபாவம் *

பகர்பொருளைப்பகுத்தறிவித்திடலநுக்கிரகம் ※
பரம்பரனைந்தொழிலாலேபுறசடசித்தனைத்தும்
மகனெழிலுமறிவுமுதித்திடமிகவுலன்றோ.....※
யகிலமுமியவனசைவிலநுவசையுமெனுமால.

இது - உடலோடுகூடியிருக்கையில் உயிர்களிடத்து நிகழும்பஞ்சகிருத்திய மிவையெனக் கூறுகின்றது.

(இ-ள்) சுகங்களையும் துன்பங்களையும் அநுபவிக்கச்செய்தல் திதியாம் உயிர்களால்காணப்பட்டவைகளையெல்லாம் ஒடுக்குதல் சொல்லுகின்றசங்காரமாம் மிகுத்தசிருஷ்டி ஸ்திதிசங்காரம் என்பவைகளுக்குள் பலநாள்உழன்றும் அந்தஇடனைவெறுக்காமல் ருசிக்கும்படிசெய்தல் சொல்லுகின்றதிரோபவமாம் இவ்வாறுசொல்லுகின்ற அநித்தியமும் நித்தியமுமாகிய பொருளைப்பகுத்துத் தெரிவிப்பது அநுக்கிரகமாம் தொடர்ச்சியுள்ளசடம்சித்து என்பவைகளுக்கும் விசாலமாகியதொழிலும் அறிவுந்தோன்றும் இதனாலல்லவா எல்லாப்பரமசிவம் அசைந்தால் அநுவுமசையுமென்று வேதமுதலியசாஸ்திரங்கள் சொல்லுகின்றது-என்கவென்

அவ்விறைவனிவ்வகையைந்தொழில்புரிவதானு...※
லவனைவெவ்வாறறிவதெனிலநுமானத்தாலே...※

செவ்வியின்முன்னறிவித்தங்கவனடியைச்சேருந் *
திகழுறுநல்விரகுமினிச்செப்புதுநீகேட்டி… *
நவ்வலருஞ்சந்திரசூரியருடுவிண்மேகஞ்… … *
சாகரமாமலைதீகால்சரவசரமேபூ…… …… … *
மொவ்வதுறுதுறுபஞ்சபூதமுமற்றுளவு … … *
முயிராவுண்டாக்குதல்கூடாதமுறையானும். *

இதுகடவுளுண்டென்பதறிவிக்கின்றது.

(இ-ள்) அந்தப்பரமசிவம் இவ்வாறு பஞ்சகிர்த்தியஞ் செய்யுமானால் அதனையெவ்வாறு அறியலாமெனில் அனுமானப்பிரமாணத்தினாலே செவ்வையாகமுன்னேஅறிவித்து அந்தப்பரமசிவத்தின் திருவடியைச் சேரும்படியான நல்லவுபாயத்தையும் இனிச்சொல்லுகிறோம்நீகேட்பாயாக -கெடுதற்கரியசந்திரசூரியர்கள்நக்ஷத்திரங்கள் ஆகாயம்மேகம் சமுத்திரங்கள் பெரியமலைகள் அக்கினிகாடு சராசரவுயிர்கள் ஒன்றுக்கொன்றுஒவ்வாதுபொருந்திய பஞ்சபூதங்களு மற்றுமுள்ள எவைகளும் சிவனால் உண்டாக்கக்கூடாத முறைமையினாலும் —என்க.

சந்திரசூரியருவேத்தரமதிலெந்நாளுந் … … *
தந்தமுறைவழுவாதுகொட்பறுதலானுங்…… *
சுந்தரம்வாரியின்மொண்டேபொழிகருதலானும் *
கடறன்னெல்லையைமீறிக்கடவாமையானுஞ் ' *

செந்தழன்மாறாதமீறிச்செல்லியாமையாலுந் ... *
திகழ்காலம்பலவிதமாய்ச்சேர்ந்துறுதலாலு *
மந்திரத்தாற்பாம்பாதிவசமாகையாலு... ... ...*
மன்னுயிர்பாரம்பரைமாறாதுறைதலாலும்...*

(இ-ள்) சந்திர சூரியர்களும் நக்ஷத்திரங்களு
ம் ஆகாசத்தின்மேலெந்நாளும் தத்தமுறைதவறாம
ல் சுழன்றுவருகின்றதினாலும் மேகமானது ச
முத்திரத்தில் நீரையுண்டு பூமியில்பொழிவதினா
லும்-சமுத்திரமானது தன்னெல்லையை மீறிக்கட
வாமலிருப்பதினாலும் அக்கினியுங் காற்றும் அளவு
மீறியுண்டாகாமையினாலும் விளங்குகின்ற காலம்
பலவிதமாய்ச்சேர்ந்து பொருந்துவதினாலும் மந்
திரத்தினால் பாம்புமுதலான ஜெந்துகள்வசமாதலி
னாலும் நிலைபெற்றவுயிர்கள் பரம்பரை மாறாமல்
பொருந்தியிருப்பதினாலும்—என்க. (௰அ)

செந்நீரின்வெண்ணீர்போற்சேர்ந்தொருபாலிங்
கட் - இந்துதிரஞ்சிந்தாமற்பந்தமுறத்தங்கி *
யந்நீர்கண்மண்ணதனிற்சித்திரிகன்பதுமை.....*
யாக்குதல்போலொருவருப்பண்ணுதாக்கையாகி
தந்நீர்மைகுறையாமற்றாயுதரத்திருந்து . .. [த்
தகுகடப்பூசணிப்பிஞ்சுதாற்பருத்துவெளியின்
மன்னீர்மைகுன்றாமற்கடமுருடையாமல்...... *
வருவதுபோல்யோனிவழிகுழவிவரலாலும் -*

(இ-ள்)உதிரத்தில் விந்துவானது போய்ச்சே
ர்ந்து பத்துமாதவளவாயில் சிதறுகின்ற முறைமை
யில் சிதறாமல் அந்நீர்கள்பந்தப்படும்படி தங்கிச்சி
த்திரிகனானவன் மண்ணினால் பதுமை யாக்குதல்
போல ஒருவருஞ் செய்யாமல் சரீரமாகித்தங்களு
டைய தன்மைகுறையாமல் தாயினுடைய கர்ப்பத்
தில் தங்கியிருந்து ஒருகுடத்தில்விட்ட பூசணிப்பி
ஞ்சானது தன்தன்மைகெடாமலும் அந்தக்குடமு
டையாமலும் இயல்பாக அதற்குள்பருத்துவெளி
யில்வருவதுபோல யோனியின்வழியில் சிசு வருவ
தினாலும்—என்க. (௰௬)

ஆனைமுதலியானவைகளுமாண்பெண்ணைகூடி ...*
லவ்வுருவவேடம்போட்டாங்குவரலானு.... ..*
ஊனமிலாண்பெண்கூடாதுயிர்தோன்றலானு . *
முறம்விதைவர்க்கப்படிகாபரமெழுதலானும்*
தீனமிலித்திபபங்கரங்கமதிற்பன்னர்... ......*
சிகழுருவிலார்நோயரிவைகளிலாவழிவ... ...*
ஈனமிடிபினர்செல்வரறிஞரறிவிலா... .....*
ஈதிபாவபுண்ணியர்களாயுறலானும்........*

(இ-ள்) ஆனைமுதலாகிய ஜெந்துக ளெல்லா
ம் ஆணும்பெண்ணுங்கூடினால் அந்தந்த ரூபவேட
ங்கொண்டுஉற்பத்தியாவதினாலும் ஊனமில்லாதது

னும்பெண்ணுங்கூடாமலே உயிர்கள் தோன்றுவ
தினாலும் கருதுகின்றவித்தின்வர்க்கப்படிவிருக்ஷங்
கள் முளைப்பதினாலும் கண்முதலான இந்திரியப
ங்களுடையவர்களும் அவயவபங்க முடையவர்க
ளும் விளங்குகின்ற நல்ல உருவமில்லாதவர்களும்
நாயர்களும் இந்தப்பங்கங்களில்லாதவடிவமுடை
யவர்களுநதரித்திரமுடையவர்களுஞ்செல்வமுடை
யவர்களும் அறிவுள்ளவர்களும் அறிவில்லாதவர்க
ளுமிகுந்தபாபமுடையவர்களும் புண்ணியமுள்
ளயர்களுமாய்ப்பொருந்துவதினாலும்-என்க. உஙி)

ஒன்பதுவாயுடனொருவாய்விட்டுடலிலுறைய ...*
வுயிர்கட்குக்கூடாமையினுமொரங்கநீங்கிற் *
றன்சுயமாய்வருவிக்கக்கூடாமையானுந் ......*
தனுக்கடொறும்மார்காற்றத்தங்கியுறலானு....*
மன்புடனாண்பிளவேண்டிற்பெண்ணுறுதலானு.*
மழகியபெண்வேண்டிமிடத்தானுறுதலானுந் *
தென்பயிலாண்பெண்வேண்டிற்சிகண்டியுறலானு
ஞ்-சித்தையிலெண்ணியவாறேசேராமையானும்

(இ-ள்)ஒன்பதுவழியுடன் பின்னுமொருவழி
விட்டுக்கொண்டு உயிருடலில்வாசஞ்செய்யக்கூடா
மையாலும் ஒருறுப்புநீங்கிவிட்டால்அவ்வுறுப்பை
உயிரானது தன்சுயமாக வருவித்துக் கொள்ளக்கூ

டாமையாலுஞ் சரீரங்கள்தோறும் ஜீவாயுக்களே தங்கியிருப்பதினாலும் ஆண்குழந்தை பிறக்க வேண்டுமென்றுவிரும்பினால் பெண்குழந்தைபிறப்பதினாலும் பெண்குழந்தைவேண்டுமென்று விரும்பினால ஆண் குழந்தைபிறப்பதினாலும்இவ்வாறன்றி ஆணாவது பெண்ணாவது பிறக்கவேண்டு மென்று விரும்பினால் அலிபிறப்பதினாலும் இவ்வாறுநாம் மனதிலெண்ணியபடி சேராமையாலும்—என்க()

மகவினிவேண்டாவெனவுமகவருதலானும் .......*
மகவுந்தாய்ப்பாலருந்தமரித்துறுதலானு ...*
பிழைசெய்தான்றன்னையொருவன்வெட்டுவிடத்தொ
ருவன்- விடுவித்தாள்கையினாலும்விளம்புறுமற்
றொருவன்-பகைவர்தமக்கஞ்சியொளித்துறவுமவர்
கையிற் படலானுந்தாபரங்கள்பரிந்துதமைக்கா
க்குந் தகையிலாதிருந்துந்தங்கியுறலானும். *
சாற்றியமுற்பிறவிதாமறியாமையினும்...*

(இ-ள்) இனிக்குழந்தை வேண்டுவதில்லையென வெண்ணியிருந்தாலுங் குழந்தை பிறப்பதினாலுங் குழந்தைபசிக்காகப் பாலுண்ணுமிடத்து அக்குழந்தையிறப்பதினாலுங் குற்றஞ்செய்தவனை ஒருவன் வெட்டும்போது மற்றொருவன்வந்துவிடுவித்து ஆளுவதினாலும் வேறொருவன் பகைவருக்கு

ப்பயந்து ஒளித்திருந்ததாலும் அந்தப்பகைவர்கை
யில் அகப்பட்டுக் கொள்வதினாலுந் தாபரஜெந்து
க்கள் தங்களைக் காத்துக்கொள்ள வேண்டுமென்கிற
விவேகமில்லாதிருந்தும் அறிவில்லாமல் நீடித்திரு
ப்பதினாலும்முன் ஜெனனத்தையும் வரும் ஜெனன
த்தையுந்தாமறியாமையாலும்—என்க. (உஉ)

இம்முறைபோலவிறந்தபேதமதாய்ச்சடமு... *
மிலங்குயிருஞ்சுதந்தரமின்றாய்நிகழ்தலாலுங் *
கம்மியனாகுயவன்கைக்கோளன்மற்காரங் ...*
கடபடமுண்டாக்கிடுமோர்காரணமேபோலச் *
செம்மைதருமருள்கோடாநிறையுயிர்கள்செய்த *
தீவினைநல்வினைக்கீடாய்ச்செறித்துவாதிகடந் *
தம்முறையேயளித்தழிப்பனருடருவானதனா .... *
லக்கடவுளுளனெனத்தீமிக்கதிடத்தறியே..... *

(இ-ள்) உடலும் உயிரும் இவ்வாறு அளவிற
ந்தபேதமுள்ளதாய்த்தற் சுதந்தரமில்லாமல் நிகழ்வ
தினாலுங் கம்மாளன் ஆபரணங்களை உண்டாக்குவதுங்
குயவன் கடங்களையுண்டாக்குவதுங் கைக்கோளன்
வஸ்திரங்களை யுண்டாக்குவதுமாகிய காரணத்தை
ப்போலப் பரமசிவன் திருவருளில மாறுபடாது
உயிர்கள்செய்த நல்வினை தீவினைக்கீடாகத்தனுவாதிக
ளைக்கொடுத்து அம்முறையேரக்ஷித்துச்சங்கரிப்

பதமன்றிப்பக்குவாத் மாக்களுக்கு அனுக்கிரகமு ஞ்செய்வன் ஆகையால் அக்கடவுள் எல்லாவற்றிற் கும் நிமித்தகாரணனாயிருக்கின்றானென்று நீயுறுதியு டனறிந்துகொள்ளக்கடவை—என்க. (உ௩)

தன்றேத்ருணாத்தனை சம்மதித்தே னான்முகவ......*
னாதியர்காசிபன்விசுவாமித்திர னாதியர்க......*
ளொன்றோடொன்றொவ்வாதசமயகடவுளர்க [ளனை
ருந்தொழில்செய்துவரென்பதென்னைய நூமே
குன்றுமேவார்குடையிற்குவலயமுழுதாள்வோன் *
றனைகழல்சேவிதரவன் றன்றொழில்புரிவாரெனி
தென்றுரைப்பவரசனைதானையைவிடவேறிகழாச் [னுந்
செய்தியின்மெய்ப்பிறையருளாற்செய்வரவர்தொ
ழிலே ........................ .... ......*

(இ-ள்) குருவே தேவரீர் போதித்தவை நன் மையானவைகளை அடியேனுஞ்சம்மதித்தேன் ஆ றப்பிரமதேவன் முதலானவர்களும் காசிபரிஷிவி சுவாமித்திர ரிஷிமுதலானவர்களும் ஒன்றோடொ ன்றொவ்வாதபலசமய கடவுளர்களும் மேற்சொல் லியபஞ்சகிருத்தியங்களைச் செய்வார்களென்று சொ ல்லுவது யாதுகாரணமோ அருள்செய்யவேண்டும்- மாணாக்கனே அதைச்சொல்லுகிறேன் நீகேட்பாயா க -குன்றாத ஒருகுடைநிழலில் இவ்வுலகமுழுவதை

டும் ஆளுகின்ற அரசனுடைய சத்தியாநின்ற வீர கண்கடையணிந்த சேவிதர்களாகிய மந்திரி முதலானவர்களும் அந்தஅரசன்செய்யுந்தொழிலைச் செய்வார்களேயானாலும் இனியபூமாலையணிந்தஅவ்வரசனுடையஆக்கினையையன்றி நடவாத தன்மையைப் போல மெய்ப்பொருளாகிய பரமசிவத்தினுடைய திருவருளால் மேற்கூறியபிரமன் முதலானவர்கள் தொழில் செய்கின்றார்களென அறிந்துகொள்ளுதி—என்க. தேன் என்னுஞ்சொல் தென் எனக்குறுகியதாகக்கொண்டுதேனிறைந்தபூமாலையெனப்பொருள்கூறினும்அமையும். (உச)

அவ்விறைவனென்னுஞ் செய்யுள் தொடக்கி இச்செய்யுள்வரையிலொருதொடர்.

இந்தவுலகாளிறைவன்றனையறியாதமைச்ச [யோ
ரொன்னுறுமற்றயலோரோர்தொழில்புரிவாரது
லந்தவிறைதனையறியாதயன்முதலாமவர்க... ...[ல்
ளாந்தொழில்கள்சிற்சிலசெய்யாரோவிங்கெல்லி
நந்துறுபல்லுயிர்கடமைமலத்தினைவிட்டெடுத்த.*
நாட்டொடங்கிவீட்டிருத்துநாள்காறுமவைசெய்
பத்தவினையறிந்தருத்துமஃதலலாலர்தப் .. [லை
பன்னவர்மாமுனிவர்க்கும்பண்ணுவனந்தொழி

இது பஞ்சகிருத்தியங்கள் பரமசிவத்தை ய

ன்றி வேறொருவருஞ் செய்கின்றவரில்லையென்பதுணர்த்
துகின்றது.

(இ-ள்) இந்தவுலகத்தைபாளுகின்ற அரசனை
யறியாமல் அவனுடையமந்திரி முதலாகவென்று
நின்ற மற்றத்தொழிலாளிகள் ஒவ்வொருதொழில்
செய்வார்களேயதுபோல அந்தப்பரமசிவத்தைய
றியாமல் பிரமதேவன் முதலானவர்கள் பஞ்சகிர்த்
தியங்களில் சிலகிர்த்தியங்களைச் செய்வாரோவென்
றும் வளர்கின்றபலவுயிர்களையும் ஆணவமலத்தை
விட்டொழித்துத் தனுகரணங்களைக் கொடுத்ததான்
முதல் மோக்ஷத்திலிருத்தும் நாள்வரையில் அந்த
வுயிர்கள் செய்தபந்தவினையை யறிந்து அவைகளு
க்கூட்டிப்புறக்கி யுபசரிப்பதுமல்லாமல் அந்தப்
பிரமதேவன் முதலானமுனியார்களுக்கும் பஞ்சகிர்
த்தியங்களைச் செய்வன்—என்க. (உ௫)

தனிபுயர்ந்தோர்யாவர்க்குமியாவைக்குமேலோர் *
தாயகனுமென்றறிவித்திட நினைக்கொண்டா
யினியவன்றன்சேவடிசேர்வீரகுமாறத்திநிது ..*
மிகைமாறுதிசயத்திற்பரிவாகக்கொள்வாய் [ந்த
மூலமுமாசெயைத்தொழில்போற் குக்குமகாரண
முண்டதனைத்தெளிவதவன்றிருவடியைச்சேருந்
தனிமிகின்றவறிவெனத்தெளிந்தோதியவைத்தொழில்

ள், சடசித்தோரிரண்டினிடைத்தப்படுட்டாட்டி
கரும். ......................................... *

இது பரமசிவத்தின் திருவடியைச்சேருமு
பாயங்கூறுகின்றது.

(இ-ள்) மேலேமுடர்ந்தோர்களுக்கும் மற்றமுள்
ள எல்லாப்பொருள்களுக்கும் மேலான ஒருதலைவ
ன் உண்டென்று நாமறிவிக்க நீயதனை எற்றுக்கொ
ண்டனை இனி அத்தலைவனுடைய சிறப்புப்பொரு
ந்திய திருவடியைச்சேரும் உபாயமும் சொல்லுகி
றேம் இதனைமாறுமல் இதயத்தில் பரிவுடன்கொ
ள்ளக்கடவை -முன்னம்சொல்லிய பஞ்சகிர்த்தியங்
களைப்போலச் சூக்குமகாரணத்தும் உண்டு அதை
அறிவதே அந்தத்தலைவனுடைய திருவடியைச்சே
ரும் உபாயமாம் சூக்குமகாரணங்களிலும் உண்டெ
ன்பதெதுவென்றால் முன்டுச்சொல்லிய பஞ்சகிர்த்
தியங்களுஞ் சடம் சித்து என்று சொல்கின்ற இர
ண்டினிடத்தும் இரண்டுபிரிவாய்நடக்கும்— என்க.

சடமதனிற்சிருட்டிதிதிசங்காரதிகழுந் ... ... ... *
தகுமுயிற்றிரோபாவமனுக்கிரகந்தங்கும் ... *
திடமுறுமத்திதியிரண்டாஞ் சுகதுன்ப மருத்துஞ்
செப்பினெம்முறைபாற் செய்தொழிலாறமைவ
யுட்படுதநுதற்சிருட்டியினிற்சுகமருத்துந்திதியிற்
பரமனுக்கிரகத்திற்பன்னலுறுமுயிர்க்குக் *
கடிகலின்பாந்துன்பத்திதிசங்காரத்திற் ... ... *
கழறுதிரோபாவத்திற்காணுறுதுன்பாமே ... *

(இ-ள்)சடத்தில் சிருட்டியும் திதியும் சங்காரமும் நடக்குந்-தக்கவுயிரினிடத்துத் திரோபவமும் அனுக்கிரகமும் பொருந்தும்- திடம்பொருந்திய சுகதுன்பங்கள் அருத்துஞ் செய்கையால் அந்தத்திதியானது இதத்திதியென்றும், அகிதத்திதியென்றும், இரண்டுவகையாம் இவ்வாறுதிதியிரண்டென்று சொல்லப்பட்டமுறைமையால் கிருத்தியமென்பதுஆறாகும்,

வினைகளாக்கல்-முதன் ,மூவர்க்கேவல்செய்தல்-என-ஆறு. (உ௯)

சகலமதேசிருட்டியபதாங்கேவலஞ்சங்காரந்... ...*
தருசுத்தந்திதியாகுஞ்சாக்கிரஞ்சொப்பனத்தோ
டிகல்சுழுத்தி துரியந் துரியாதீதமிவற்று.........*
ளியம்புமுதற்சாக்கிரமேசிருட்டியதுவாகும் *
புகல்கனவுதிதியாகுஞ்சுழுத்திமுதல்மூன்றும்...*
போக்கிடுசங்காரமதாம்பொருநனவிற்கனவிற்கு
பகர்சுகதுன்புண்டாகுஞ்சுழுத்திமுதன்மூன்றிற்-*
படிறிடராமிவைபாண்டிற்சகடெனவேவருமால்

இது - ஐந்தவஸ்தைகளிலும் முத்தொழிலு ண்டென்னு முறைமை கூறுகின்றது.

(இ-ள்.)சகலாவஸ்தையே சிருட்டியாகுங் கேவலாவஸ்தை சங்காரமாம் - சுத்தாவஸ்தைதிதியாகுஞ் சாக்கிரஞ் சொப்பனஞ்சுழுத்தி துரியந்துரியாதீதம் என்னு மிவற்றுள் முதலிற்சொல்லிய சாக்கிராவஸ்தையே சிருட்டியாம்- சொல்லுகின்ற சொப்பனுவஸ்தை திதியாகுஞ் சுழுத்திதுரியந் துரியாதீதமென்னும் மூன்றும் நீங்குகின்றசங்காரமாம்- சாக்கிராவஸ்தையிலுஞ் சொப்பனுவஸ்தையிலுஞ் சுகமுந்துக்கமும் உண்டாகும்-சுழுத்திமுதலாகிய மூ

ன்றவஸ்தையிலுந் துக்கமே உண்டாகும்- இவைகள் வண்டி உருளைப்போலமாறிமாறிவரும்- என்க(௨௯)

தனவினிலைம்புல னுகரும்பொழுதைந்திந்திரியத்தும்
நவின்றிடுமைந்தொழில்களும்வந் துறுமவையிங்
குரைப்பின் - முனமுறையோரிந்திரியத்தைப்பொரு
ந்தியசேசிருட்டி- முதிர்விடயமருந் துவதேதிதி
யாகும்விடயந்- தனையறியுந்தனைவேறுச்சாற்றவொ
ண்ணதழுந்தல் - சங்காரமிதைருசிப்பித்திடுதறி
ரோபாவ - மினிதினிதன் றெனவுணர்தலனுக்கிரக
மாகு - மிம்முறையுட்கரணத் துமியங்குறுமைந்
தொழிலே..........................................*

இது-உட்கரணங்களினிடத்தும் ஐந்தொழிலுள் தென்று கூறுகின்றது.

(இ-ள்.)சாக்கிராவஸ்தையில் ஐம்புலன்களை உண்ணும்பொழுது பஞ்சேந்திரியங்களிலுஞ்சொல்லுகின்ற பஞ்சகிர்த்தியங்களும் வந்து பொருந்தும்- அவைகளை இங்குச் சொல்லுமிடத்தில் முன்னுகச் சொல்லுகின்ற இந்திரியத்தைப்பொருந்தியதே சிருட்டி - மிகுந்த விஷயத்தை அருந்துவதே திதி - அவ்விஷயத்தை யறியுந்தன்னை வேருகப்பிரித்துச் சொல்லவொண்ணுமல் அதில்அழுந்துதலே சங்காரம்- இவ்விஷயங்களை ருசிப்பித்திடுதலே தி

ரோபவம் - இனிதன்று இது இனிதன்றெனவுண ர்தலே அனுக்கிரகம்-இம்முறைபாக உட்கரணத்து ம் ஐந்தொழிலும் நடக்கும்—என்க. (உஅ)

ஒருபொருளை நினைந்தெழுதல் சிருட்டியதுதனையக்
குனிமகிழ்ந்தறிதியதனைமறந்திடல்சங்கார..... *
மருவியதின்மயங்குதலேதிரோபாவம்பின்னர்...*
மற்றதனைத்தெளிந்தறிதலனுக்கிரகமாகும் ... *
கருவிகளொவ்வொன்றிலுயிர் கலந்துறுபோதெல்
லாங்-காரணனைந்தொழிலுளமுன்கழறுமுறைகா
ணில்- விரவுகருவியின்மூன்றுமுயிரினிடத்திரண்டு
மேவுறு மைந்தொழில்களுமுன்மெய்க்குயிர்க்
கோதியல்போல்................................*

இது-சாக்கிராவத்தையில் பஞ்சகிருத்திய மு ண்டென்னு முறைமை கூறுகின்றது.

(இ-ள்.) எதாவ தொருபொருளை நினைந்து ம னம்எழுதல் சிருஷ்டி- அதனை நினைத்து மகிழ்ச்சி யடைகுதல் திதி-அந்தப்பொருளை மறந்திடுதல் ச ங்காரம்- அந்தப்பொரு ளின்னதென்று ஞாபகத் தில்வராமல் மயங்குதல் திரோபவம்- பின்பு அந்த ப்பொருளைத் தெளிந் தறிகுதல் அனுக்கிரகமாம் இவ்வாறு ஒவ்வொரு கருவிகளில் உயிரானது கல ந்திருக்கும் போதெல்லாம் பரமசிவனுடைய பஞ்

ச கிருத்தியங்களுமுள முன்சொல்லிய முறைமை
யை அறியுமிடத்திற்கரணங்ளிடத்தில் மூன்றும்
உயிரினிடத்தி லிரண்டுமாகப் பொருந்தும் எவ்வா
றென்னில் முன்னம்பஞ்ச கிர்த்தியங்களும் உடலு
க்கும்உயிருக்குஞ் சொல்லியதுபோல- என்றறிக.()

நாலிருபத்தொருநான்கை நண்ணிலக்கவிதமா ...*
நவிலுடலிற்றொழிலிறைவன் புரிவது தூலமதாந்
தூலவுடலவத்தைகளிற்கருவிகளொவ்வொன்றிற் *
றொழிலபுரிதல்சூக்குமமா நீக்கமறநின்றே ...*
எலுறுமிவ்வுடலுயிரோர்கருவியினிற்பிறந்து மிரு
ந்து,மிறந்துங்கணத்திற்சுழலுமிவ்வாறளவில் *
காலமவற்றுற்றிடமோகண்டதலாலந்தக்... .. ...*
கடவுளடிசேர்சுத்தங்கண்டதிலவ்வுயிரோ... ...*

இது - தூலசூக்கும பஞ்சகிருத்தியங்களைச்
சொல்லுகின்றது.

(இ-ள். எண்பத்து நான்கு லக்ஷபேதயோனி
களாகச் சொல்லப்படுகிற உடல்களிடத்தில் பர
மசிவம் பஞ்சகிருத்தியங்கள் செய்வது தூலமாம்அத்
தூலவுடலின் அவத்தைகளில் கருவிக ளொவ்வொ
ன்றில் பஞ்சகிருத்தியஞ் செய்வது சூக்குமமாம்
பொருந்திய இவ்வுடலுயிரானது நீக்கமில்லாபடி
ருந்து ஒவ்வொரு கருவியிற் பிறந்தும் இருந்தும்

இறந்தும் க்ஷணப் பொழுதில் சுழன்று கொண்டிருக்கும் இவ்வாறு அளவில்லாதகாலம் அந்தக்கருவிகளிற் பொருந்தித் துன்பத்தைக் கண்டதேயல்லாமல் அந்தப் பரமசிவத்தின் திருவடிகளிற் சேரும்படியான சுத்தநிலையை அந்த உயிர் கண்டதில்லை—என்க. (௩௰)

இறைவனடிசேர்சுத்தமெங்ஙனென்னிலதுதா ...*
னிபம்புறுகாரணபஞ்சகிருத்தியத்தாலறியு ...*
முறைமையதாமிஃதுமினிமொழிகுதுநாமுன்னர்
மொழிந்தனகேட் டறிவதுபோலறிவதுவன்றித
ணைநெறிகொள்சமாதியினிலிருந்தறிவதுவாமறிந்தா
னேர் படுநற்சுத்தமிதுநிகழ்ந்துறவேவிளங்கி *
லறிதரலாந்திருவடியுமானந்தப்பேறு.........*
மதனுன்முன்னுறுதுயர்களியாவுமகன்றிடுமே*

இது-பரமசிவத்தின் திருவடியைச் சேரும்படியான சுத்தநிலை யின்னதென்று உணர்த்துகின்றது.

(இ-ள்.) பரமசிவத்தின் திருவடியைச் சேரும்படியான சுத்தநிலை யெவ்வாறென்னில் அதுதான் காரணபஞ்சகிருத்தியத்தால் அறியு முறைமையினை யுடையதாம்-இந்தமுறைமையினையுமிப்போதே சொல்லுகிறோம்- ஆனால் நாமுன்பு சொன்ன

றுகளைக் கேட்டறிந்து கொண்டதுபோல அறிவ
தல்ல மற்றெவ்வாறறிவ தென்னில் இது முறைமை
யினையுடைய சமாதியிலிருந்து அறியத்தக்கதாம்
அவ்வாறறிந்தால் நல்ல சுத்தநிலை பொருந்தும் இ
ந்தச்சுத்தநிலை கிரமமாக நடந்து விளங்குமானால்
பரமசிவத்தின் திருவடியும் ஆனந்தப்பேறும்பெ
றிதலாம் அதனால் முன்பொருந்திய துயரங்களெ
ல்லாம் நீங்கிவிடும்—என்க. (௩௧)

அறைந்தசமாதியினிலிருந்தறிவதெவ்வாறென்னி *
லறுவகையாம்பயனின்முயற்சிகளைவிடுத்துடன்
மேற், செறிந்திடுபோகங்களின்மேற்பற்றுகளோர்
சற்றுஞ், சேராமத்தைவிட்டோ ரேகாந்தங்கைக்
கொண், டுறைந்தவிடத்தினிலொன்றைச் சாராமற்
செவ்வே, யுடல்வளையாமற்றேகக்கொன்றுஞ்சாத
னமுற், றிறந்திடுகாலந்நிகழ்காலமெதிர்காலத்தி *
லெய்துபயன்கருதாதேகாக்கிரசித்தமதாய் ...*

இது-சமாதியிலிருந்து அறியுமாறு கூறுகின்
றது.

(இ-ள்.) மேற்கூறிய சமாதியிலிருந்து அறி
வது எவ்வாறென்னில் ஆறுவகையாகிய பயனில்லா
த தொழில்களைவிட்டு இந்தத் தேகத்தின் மேலும்
பொருந்திய போகங்களின் மேலுமுள்ள பற்றுக

ளொன்றுஞ் சேராமல் கைவிட்டுத்தனியாகிய ஏகா ந்தங் கைக்கொண்டு பொருந்திய இடத்தில் ஒன் றினைச் சாராமலும் உடலானது வளையாமலும் சரீரத்துக்குப் பொருந்திய சுகாசனத்தைச் செவ் வையாகப்பொருந்தி இறந்தகாலத்திலும் நிகழ்கால த்திலும் எதிர்காலத்திலும் வருகிறபயனைக் கருதாம லும் ஏகாக்கிரசித்தமாய்-என்க. (ருஉ)

பிருதிவிதத்துவமுதலா நாதமதிறுகப்...... ,.....*
பேசியநாலொன்பானுளோரொருமாகருவிக் *
குருவமுடன்றரிசனசுத்தியுமிவையென்றுன்னி *
யொவ்வொன்றுறியதிகளைந்துயர்நாதமேறிக் *
கருவிகளையென்றுமேலகண்டதனுற்சடமாங்......*
கண்டிவற்றைக்கழன்றவனுன் காட்டியதுகடவுட்
டிருவருளென்றறிந்தருளைச்செறிந்திடுதியிதனுட்*
சிவனைந்தொழில்நடக்குஞ்செய்தியதுகேளே.

இ-து-தத்துவங்கள் சடமென்றறிந்து கழன்று தேகியைக்காட்டியது திருவருளென்னு முறைமை கூறுகின்றது.

(இ-ள்.) பிருதிவிதத்துவமுதல் நாததத்துவமீறு கச்சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களுக்கு ள் ஒவ்வொருதத்துவத்துக்கும் உருவமும்தரிசனமு

ம் சத்தியும் இவைகளென்று அறிந்து அவைகளை யொவ்வொன்றாக நியதிசெய்து உயர்ந்த நாதத்துவத்திலேறி இந்தக்கருவிகளென்னாற் காணப்பட்டதனால் அவைகள் சடமாம் இவைகளைக்கண்டு கழன்றவனான் இவ்வாறு நான் காணும்படிகாட்டியது பரமசிவத்தின் திருவருளென்றறிந்து அவ்வருளைப்பொருந்தக்கடவை- அதனில் பரமசிவனது பஞ்சகிருத்திய நடக்குமுறைமையைக் கேட்பாயாக என்க. (௬௬)

கருவிகளொவ்வொன்றாகத் தோன்றுதலேசிருட்டி-
கண்டதனினின்று தரிசித்தல்திதியதனை ...... *
பொருவுதலேசங்காரமருண்மீதிற்பேரன் ..... *
புற்றெழுதல்சொற்றிரோபாவமதேயாகுந் ...*
திருவருளேகண்ணாகக்காண்பதநுக்கிரகந் ......*
திருவருளிற்பிறிவறநீதினமுமிருந்திடுபோ ...*
தொருநினைவுந்தெழுதல்சகலமறைப்பாகி ... *
யுறுவதுகேவலமாமிக்கிருவகையுமொருவ ...*

இ-து- தத்துவநியதியில் பஞ்சகிருத்திய நடக்குமுறைமையைச் சொல்லுகின்றது.

(இ-ள். மேற்கூறிய தத்துவங்களொவ்வொன்றாகக் காணப்படுவதே சிருஷ்டி- அதனைக்கண்டு அதினின்று தரிசித்தலே - திதி அதனை நீங்குதலே சங்

காரம் - திருவருளினிடத்தில் பேரன்பு பொருந்தி மேலெழுவது திரோபவம் - அந்தத்திருவருளேக ண்ணுகக்காண்பது அனுக்கிரகம் அந்தத்திருவரு ளிற்பிரிவற நீதிணமு மிருந்திடும்போது ஒருநினை வு அங்குப் பொருந்தியுண்டாகுதல் சகலம் அந்நி னைப்புமறைப்பாகியுறுவது கேவலம் இங்குக்கூறப் பட்ட இவ்விருவகையும் நீங்கும்படி-என்க. (ருச)

ஒருறுதிசொல்லுதுநீகேட்டிநினைவெழுந்தா ... *
லுறுநினைவின்வயமாவையுற்றபினர்த்தெளிந்து,
சீரருளினிற்பையிதில்நின்றலந்நினைவுன்........ *
செங்கைவயமாமிவனுஞ்செறிந்திடுமப்போது *
சேருநினைவெழுந்ததனின்வயமாகுமதனைத்......*
திரோபாவமென்றறிதிதிருவருளைச்சென்று *
சார்தலனுக்கிரகமெனத்தெளிதியருடன்னைத் ...*
தான்மேவண்டிற்சின்னுளிற்சகலமறுந்தானே.. *

இ-து-மேற்கூறிய சகல கேவலங்கள் நீங்கும் உ பாயங்கூறுகின்றது.

(இ-ள். ஒரு உறுதிசொல்லுகிறேம்அதனை நீகே ட்கக்கடவை திருவருளில் நிற்கும்போது நினைவு ண்டாகுமானல் நீ அந்நினைவின்வசமாகுவை அவ் வாறு அதன்வசமானபின்பு தெளிந்து சீர்பொரு ந்திய திருவருளி னிற்பை இதில்நின்றல் அந்

தநினைவு உன்கைவசமாகும் - இவ்வாறிருக்கும்போது உண்டாகிற நினைவானது அந்த அருளின் வசமாகும்-அதனைத் திரோபவமென்று அறியக்கடவை அந்தநினைவானது திருவருளைச் சென்று சேர்தலே அனுக்கிரகமென்று தெரிந்துகொள்-அந்தத்திருவருளினை விரும்பினால் சிலநாளில் சகலாவத்தை நீங்கிவிடும்-என்க. (௬௫)

சகலமறிற்கேவலந்தான்வந்துவந்துதாக்குந் ..... *
தகைமைத்தாமெங்ஙனெனிற்றண்மதியைமேக*
மிகலொடுவந்தடிக்கடிமூடுதல்போலவிதுமுன் [ம்
னிருஞ்சகலத்தொடுமலந்துவருந்தகைமைத்தாகு
புகரில்சமாதியினிலுடல்கற்றானைப்போலப் ... *
பொறபின்வளையாதுற்றுப்பித்திகையிற்சாயா*
நிகலறுபொருளாலேமண்டகனைத்தடுக்க........*
விகைசத்திடுகேவலமுமறுமிருவகையுமறவே...*

இ-து- சகலம் நீங்கினவிடத்தில் கேவலமேலிடுமென்றும் சமாதிநிலையில் நின்றால் அதுவும் நீங்குமென்றுங் கூறுகின்றது.

(இ-ள்.)சகலம் நீங்கினவிடத்தில் கேவலமானது வந்து வந்து தாக்குமுறைமையுடையதாம்-அது எவ்வாறென்னில்குளிர்ச்சிபொருந்திய சந்திரனைமேமோனது வன்மையுடன் வந்து அடிக்கடி மூடுவது

போல (எனவறிக)இந்தக்கேவலமானது முன்சொல்லிய சகலத்தோடுசேர்ந்து பொருந்திவருந் தகைமையுடையதாகும்-அது அத்தகைமையினையுடையதாயிருந்தாலும் சொல்லுகின்ற சமாதியிலுடலானது வளையாமலும் சுவரிற்சாராமலும் பொலிவுடனே சற்றானைப்போலிருந்து குற்றமற்ற பெரியதிருவருளாலேபார்த்துக் கேவலமேலிடாமல் தடுத்தால் பொருந்திய அக்கேவலமும் அறும்-இவ்வாறு இவ்விருவகையும் நீங்கினால்—என்க. (௫௬)

மாயையுங்கன்மமுமந்தச்சகலத்தோடொழியும்.. *
வழுக்கியகேவலத்துடனாணவமாயுமிவைதாம் *
ஆயவசுத்தம்மிவையகன்றதுவேசுத்த.. —... [ற்
மதனையுலாத்திடின்மலைவாய்க்கதிர்வீழ்காலம்போ
றாயவருணோதயப்போற் றோன்றுமிதைப் பெரி
யோர், தன்னுமிராப்பகலற்றவிடமென்று மறப்
பு, மேயநினைப்புமில்லாவிடமென்றுமிறப்பு. *
மிகுபிறப்புமில்லாதவிடமென்றும்புகல்வார் *

இது-ஆணவ கன்மமாயைகளாகிய அசுத்தம்நீங்கினவிடத்தில் சுத்தந்தோன்றுமென்னு முறைமைகூறுகின்றது.

(இ-ள்.) மாயையுங் கன்மமும் அந்தச்சகலத்துட னீங்கிவிடும் அதுநீங்கவே மேலுண்டாகுமென்

ற கேவலத்துடன் ஆணவம் நீங்கிவிடும் மாயை க ன்மம் ஆணவம் என்ற இம்மூன்றும் அசுத்தம் இ வைகள் நீங்கினவிடமே சுத்தம் அதைச் சொல்லு மி த்தில் அஸ்தமனகிரியிலிடத்தில் சூரியன்விழு ப்படியான மாலைக்காலம் போலவும் பரிசுத்தமான அருணோதயம்போலவும் தோன்றும்- இவ்வாறுதோ ன்றுவதை இராப்பகல் அற்ற இடமென்றும் நினை ப்பு மறப்புமில்லாத இடமென்றும் பிறப்பும் இ றப்பு மில்லாத இடமென்றும் பெரியோர்கள்சொ ல்லுவார்கள் —என்க. (௩எ)

சுத்தத்தைப்பெற்றதனிலுன்போதஞ்சிறிதுந் ...*
தோன்றாமனின்றிடமேதோன்றும்பேருடா *
னெத்திக்கும்பலகோடிசூரியரொருமியி....... *
னெய்தியவாறைபமறும்பேரொளியதாகித் ...*
சித்திக்குமமுதகடலுலகமெலாம்பரந்த.........*
செப்திபினைசடசித்துக்குட்புறநுப்திறைவாய்*
வர்த்திக்குநிர்வபமாய்நிட்களமாய்நிமல... .. ...*
வடிவாகிக்கேடில்லாவான்பொருளாயெங்கும் *

இது-திருவருள்நிற்கும்நிலைமைகூறுகின்றது.

(இ-ள். மேற்கூறிய சுத்தத்தைப்பெற்று உன் போதஞ் சிறிதுந்தோன்றாமல் அதினின்றால் திரு வருளானது தோன்றும் அவ்வாறுதோன்றியதிருவரு

ளானது எல்லாத் திக்குகளிறம்பலகோடி சூரியர்கள் ஒரேயிடமாகத் தோன்று முறைமைபோல சந்தேக மில்லாத ஒரு பேரொளியாய் அமிர்த கடலானது உலகமெங்கும் பரந்த தன்மைபோலச் சடசித்துக்ளுக்கு உட்புறமாகிப் பூரணமாயும் நிர்வயமாகியும் நிட்களமாகியும் நிருமல சொரூபமாகியும் அழிவில்லாத சிறந்தபொருளாகியும் எங்கெங்கும் விர்த்தியாகும்—என்க. (ருஅ)

இப்படிதோன்றியவருளிலுன் போதந்தோன்று *
மெங்ஙனெனின்முனர்மாயா போதத்தைக் கொ
ண்டே,செப்பரியபிரவஞ்சமறிவதுபே லிந்தத் *
திருவருட்போதத்தாலேயவ்வருளைச்சிவத்தைத்*
தப்பரியநின்போதமெதிரிட்டுக்காணுந்தற்பானை *
யப்போதந்தணந்ணையவேண்டும் ........ *
மப்பொருளைப்பகுத்தனிற்குநிலக்குவனம *
யலர்விழிதேசைக்கநிறைப்பிறிபடநோக்குதலே.

இது-தற்போதம் நீங்கவேண்டுமென்னுமுறைமைகூறுகின்றது.

(இ-ள்) இவ்வாறுதோன்றிய திருவருளில் உன்போதந் தோன்றும் எவ்வாறென்னில் முன்னம் மாயாபோதத்தைக் கொண்டு சொலுதற்கரிய பிரவஞ்சத்தை அறிவதுபோல இந்தத் திருவருட் போதத்தால் அந்தத் திருவருளையும் சிவத்தையும்

நீங்குதற்கரிய உன்போதம் எதிரிட்டுக்காணும் அப்
போதம்நீங்கிப் பரமசிவத்தைச் சேரவேண்டும் அ
ந்தப்பொருளைப்பகுத்தறிந்து அதில்நீ நிற்கும் மு
றைமைத்துவமை பரந்த கண்ணொளியானது கிரணத்
தையும் சூரியனையும் பிறிவுபட நோக்குதல்போலா
ம்—என்க. (௩௧)

உன்போதமறவிரகுண்டுரைசெய்குங்கேணீ [க்கா
யுருவிழிதேசைக்கதிரைப்புடைபெயர்ந்து நோ
தன்போடக்கதிரோர்திரங்கசைவறநின்றிடவே... [ல
யதுவிதுவென்றிரண்டறவேதோன்றுமதுபோ
நின்போதமருள்சிவநானென்றுபகுக்காது.....*
நிகழ்சிவநேர்நின்றிடவொன்றிரண்டாகாவயிக்க,
மின்போடெய்துறுமிதனைக்கண்டுகொணீகண்டே-
யிதனிலெழும்பேரின்பமேழ்கடலிற்பெரிதே*

இ-து-தற்போதம் நீங்குதற் குபாயங்கூறியது.

(இ-ள். உன்போதம்நீங்குதற்கு ஒருபாயமுண்டு-
சொல்லுகிறேன்கேள் பொருந்திய கண்ணானது
கிரணத்தையும் சூரியனையும் பிரித்துப்பாராமல் அ
ன்புடன் அந்தச்சூரியனுக்கெதிரில் அசைவற நின்
றால் கண்ணொளியென்றும் சூரியனொளியென்று
ம் சொல்லுகிற இவ்விரண்டு பேதங்களுமில்லாமல்
தோன்றும் அதுபோல நின்போதமானது அரு

ளென்றும் சிவமென்றும் நானென்றும் பிறிக்காம
ல் பரிபூரணமாகிய பரமசிவத்துக்குநேராக நீநிற்கி
ல்ஒன்றென்றும் இரண்டென்றும் ஆகாத அயிக்கம்
பேரின்பத்துடன் பொருந்தும் நீயிதனை அறிந்
துகொள்ளக்கடவை இவ்வாறு கண்டால் பொருந்
தும் பேரின்பமானது எழுகடலினும் பெரிதா
ம்—என்க. (சய)

முன்னருறுங்கருவிதுகள்பசுவினறிவெனவே...*
மொழிந்தவையுளொன்றேனுங்கண்டிலனிதென்
னை-நான்னுமிருளுடுமதியின்சுடரிலைகள்கதிர்முன்
மேருன்றுவாசிவத்தின்முணர்த் தோன்றுதென்றறி
வா-புன்னலருஞ்சுகமதனிலுதித்ததெவ்வாறென்னி*
லுறுபெண்ணாண் கூடிமிடத்துற்றெழுமின்பே
போன்-மன்னுயிராகியபெண்ணுஞ் சிவமெனும்
மாணு- மணைந்திடும்போதெழுந்திடும்பேரான
ந்தவாரி....... ..............................*

இது-பேரின்பத் தோன்றுதற்கு மேற்கோள்
கூறுகின்றது.

(இ-ள்.) முன்னப்பொருந்திய தத்துவங்களும்
ஆணவமலமும் சிவ அறிவென்றுசொல்லிபவற்றுள்
நானொன்றுகிலுங்கண்டிலன் இதுஎன்னகுருவே,மா
ணவகனே சொல்லக்கேள்பொருந்தியஇருள் நக்ஷத்

திரங்கள் சந்திரப்பிரகாசம் என்னும் இவைகள் சூரியப்பிரகாசத்துக்குத் முன்தோன்றாத முறைமை போல அவைகள் சிவத்தின்முன் தோன்றாவென்றறிவாயாக-நினைத்தற்கரிய சுகமானது அச்சிவத்துடன் கலந்தபோதுஉண்டானதெவ்வாறென்னில்-பொருந்திய பெண்ணும் ஆணுங்கூடுமிடத்துண்டாகும் சிற்றின்பம்போல அழிவில்லாத உயிராகிய பெண்ணும் சிவமென்னும் ஆணும்கூடினபோது,பேரானந்தக்கடல்உண்டாகும்—என்க. (சக)

திருவடிசேர்விரகென்முன்னுரைதந்தீரந்தத் ...*
திருவடியிங்கேதென்னிற்றிரோதமருளென்னு*
மிருவகையுமிறைபாதமிவைமேன்மேலூக்கி... ...*
யிருந்திடுங்கீழ்நோக்கியதாளெப்துறுமாருயிர்க்
கு-வருவினையொப்பாக்கிமலபரிபாகமாக்கு......*
மற்றதம்பேரானந்தவாரிதருமிவைகள்.... .... *
பொருவிலுயிர்ச்சிரசின்மிசைப்பிறிவறவே தங்கும்
பொற்சபையினின்றநிலைதிட்டமதுகாணே ...*

இது- பரமசிவத்தின் திருவடித் தன்மை கூறுகின்றது.

(இ-ள்.) குருவேதிருவடிகளைச் சேரும் உபாயமிதுவென்று முன்னம் உரைத்தருளினீர் அந்தத் திருவடியென்பதிங்கெது வென்னில் மாணவகேள்

திரோபவம் அனுக்கிரகமென்கிற அவ்விரண்டுமே பரமசிவத்தின் திருவடிகளாம் இவைகளில் ஒரு திருவடி கீழூன்றிநிற்கும் மற்றொருதிருவடியானது மேல்தூக்கினவண்ணமாக நிற்கும் ஊன்றியதிருவடியானது நிலைபெற்ற அரியஉயிர்களுக்கு வருகிற நல்வினை தீவினையென்னும் இரண்டுவினைகளையுஞ் சமமாக்கி மலபரிபாகமுண்டாக்கும் தூக்கிய திருவடியோவெனில் பேரானந்த வெள்ளத்தைக் கொடுத்தருளும்-இத்தன்மையுள்ள இரண்டுதிருவடிகளும் உயிர்களுடைய சிரசின்மேல் பிரிவறப்பொருந்திய கனகசபையில்நின்ற நிலையாம் இது உண்மையே—என்க. (௪௨)

இவ்வடியைச்சேர்ந்தவிடத்தைத்தொழிலேதென்னி
லியை கருமாயையிலுதித்தாங்கருளி லுதித்தது
வே-செவ்வியநற்சிருட்டியதாஞ்சுகப்பேற்றதிதியா
ஞ்-சீவனிருட்போதமறல்சங்காரமாகு........*
மவ்வியமாம்பிரவஞ்சத்தோன்றுதவதுவே... ... *
யான திரோபாவமதாமாயவொருநான்குற்... *
தவ்வலறவிளங்குதலிங்கனுக்கிரகமாகுற்...... ...*
தணப்பில்சுகாதீதத்திற்கிளக்கவொண்ணாதறுமே

இ-து- திருவடிகளைச் சேர்ந்தவிடத்து நிகழும் பஞ்சகிருத்தியங்களைக் கூறுகின்றது.

(இ-ள்) இந்தத்திருவடிகளைச்சேர்ந்தவிடத்துப் பஞ்சகிருத்தியங்க ளெதுவென்னில் கூடியபமாயை யில் உதித்ததுபோலத் திருவருளில் உதித்தருளுவே செவ்விதான நல்லசிருட்டியாம்-பேரானந்தம் உண்டாவதே திதியாம்-சீவனுடைய ஆணவமலம் நீங்குதலே சங்காரமாம்-மாயையாகிய பிரபஞ்சந்தோன்றுதே திரோபாவமாம்- இவ்வாறாகிய இந்தநான்கும் குற்றமறவிளங்குதலே அனுக்கிரகமாம்-பிறிவில்லாத-சுகாதீதத்தில் சொல்லவொண்ணு திருக்கும்—என்க. (சுரு)

அளவறு நாட்பிறவியிடர்க்கடலலையிற்கிடந்த .... *
அடியேனைத் தூக்கியுமதருணடனங்காட்டி ... *
உளமகிழ்வுற்றறியாதபாவைகளுமுணர்த்தி... ...*
புயர்மவுனந்தத்தண்கடலவைத்தீரடிகள் ...*
களவினனீ துக்கோர்கைம்மாறறியேனுமது......*
கமலபதமெந்நாளும் அருளுடனேயாழி... ...*
வளநுறநம்மருளடியார்நடைபுகலவேண்டும் ...*
வாசீசத்திருவாயால் மதுரநறைபோல...... ...*

இ-து-ஆசாரியரை வியந்துகூறுதல்.

(இ-ள்.) குருவே - அளவற்றநாளாகத் துயரம் பொருந்திய பிறவியாகியசமுத்திரத்தின் அலையில்

அகப்பட்டுக்கிடந்த அடியேனை பேரருளினலெடு த்துத் திருவுள்ளமகிழ்ந்து நானறியாதவைகளாய்ப் பலவாறுகிய பஞ்சகிருத்தியங்கள் முதலானவற்றை யறிவித்து மேலானமவுனானந்தமென்னுங்குளிர்ச்சி பொருந்தியசமுத்திரத்தில் வைத்தருளினீர் இந்தப் பேருதவிக்குவஞ்சகனுகிய யான்செய்யத்தக்கபிரதி யுபகாரம் யாதொன்று மறிந்திலேன், தேவரீருடைய திருவடிகள் எந்நாளும் வாழக்கடவனவாக - சிவ ஞானச்செல்வம்பொருந்திய தேவரீருடையதிருவருள்பெற்றுள்ள அடியார்களது ஒழுக்கத்தை, செந்தாமரைமலர்போன்ற திருவாக்கினுல், மதுரமுள்ளதேன்பொழிவதுபோல இனிஉரைத்தருளவேண்டும்— என்க. (சச)

புங்கமுறுமெய்ஞ்ஞானப்புதல்வாகேளடியார்... *
புன்னெறியே துன்மறியார்நன்னெறியையுத்தானே
யெங்குமுறுஞ்சிவமொன்றேகண்டிடுவர்காணு... *
ரெண்ணரியபலவிதமாய்நண்ணுறுமாயைகளைத்
தங்கியபல்லுயிர்கட்குந்தண்ணளிமெய்யபுரிவார் ... *
தாய்போற்செய்போனுளேக்கென்றுன்னுர்சற்று,
மங்கியுமுற்பவமுற்றும்வருமவர்போற்பிறனா....*
வருபகைவருறவெனவாடார்மகிழாரே... ...*

இ-ந-அடியார்கள் பெருமைகூறுகின்றது.

(இ-ள்.) பரிசுத்தம்பொருந்திய மெய்ஞ்ஞானபு த்திரனே-நீ கேள் அவ்வடியார்கள் கீழ்மையானநெ றிகள் எவ்வளவுமறியார்கள் - நன்மார்க்கத்தையே எவ்விடத்தும் பொருந்தியிருப்பார்கள்—சிவமொ ன்றினைக் காண்பார்களேயன்றிப் பலபலவிதமாக ப்பொருந்திய மாயைகளைக்காணார்கள்-தாயானவள் தானீன்றமகவுக்கு அருள்செய்வதுபோல நிலைபெ ற்றிராநின்ற எல்லா உயிர்கட்குந் தண்மையான அ ருளேசெய்வார்கள், நாளைக்காகுமென்று சிறிதுங்க ருதார்கள்-இறந்துமுற்பிறப்பில் அடிக்கடிவருகின் றவர்போல பிறைப்பகைவனொன்றுகருதி மனம்வா டார்கள்உறவினமொன்றுமனமகிழார்கள்-என்க. (சுடு

ஆணவமேயாருயிர்கட்குப்பகையென்றறிவா ...*
ரளவறுநாளுறமூடித் துயருறவைத்ததனாற் ...*
றுணுவெனைத்தேனாதன்னளியாலெடுத்துத். *
தனுவாதிதந்ததனைப்பரிபாகமாக்கி ... ... ... *
மாணுறமின்பத்தரலானக்கடவுடானே...... ...*
மன்றுறவாமென்றறிவாரன்னவனைத்தொழுவார், *
காணுயிர்தற்சுதந்தரமாட்சுகதுன் பத்தருமேமாரி[ர்
காரணமின்மையினதனைப்பொதுவாகக்காண்பா

இதுவுமது.

(இ-ள்.) அளவற்றநாள்பொருந்தி மறைத்துத்து ன்பமுறவைத்ததனால் ஆணவமலமே உயிர்களுக்கு

உட்பகையென்று அறிவார்கள்-சிவமானது நம்மை வினவாமல் தண்ணளியால் அவ்வாணவ மலத்தினின்றெடுத்துத் தநுகரணபுவனபோகங்களைத் தந்தருளி அவ்வாணவமலத்தைப் பரிபாகமாக்கி மாட்சிமைபொருந்திய பேரின்பம் அருளிச்செய்வதினால் அந்தச்சிவமே நிலையான உறவென்று அறிவார்கள்-அறிந்து அக்கடவுளையே தொழுவார்கள்-காணுகின்ற உயிர் தற் சுதந்தரமாகச் சுகதுக்கங்களைத்தருகின்ற காரணஞ் சிறிதுமில்லாமையால் அவ்வுயிரைப் பொதுவாகக்காண்பார்கள்— என்க. (சகூ)

உளழ்வினையாலேபிறருக்குயர்நன்மைசெயினு .. *
மொருவர்தமக்குத்தீமையுறுநன்மைசெயினுந்*
தாழ்வறுபேருளானன்றன்செயலாநினைவார் ... *
தம்பாலோர்தீமையுமிற்றம்மைவெறுத்திடுவார் *
காமுறுநெஞ்சினர்பிறருக்கொருநன்மைசெயினுங்
கருதயலார்தீதுதமக்குச்செயினுங்காண்பா-...*
ரேழ்கடலிற்சுகதுன்பமியாம்பிறரொன்றுன்னி ...*
யிவைமாறிச்செய்புமிடத்தீசன்மேல்வைப்பார்*

இதுவுமது.

(இ-ள்.) ஊழ்வினையினால் ஒருவருக்கு மேன்மையாகிய நன்மையைத் தாங்கள் செய்தாலும், அல்லது மற்றொருவர் தங்களுக்குத் தீமையாவது நன்

மைபாவது செய்தாலும், தாழ்வில்லாத பேரருளா
ளனாகிய பரமசிவனது செயலென்று நினைவார்கள்-
தம்மிடத்திலொரு நன்மையிருக்குமானால் தங்களை
வெறுத்துக்கொள்வார்கள். காமியத்தைப்பொருந்
திய மனமுள்ளவர்கள் பிறருக்கு ஒரு நன்மையினை
ச்செய்தாலும் கருதுகின்ற அயலாரா யிருப்பவர்க
ள் தங்களுக்குத்தீதுசெய்தாலும் அந்தந்தப்படியே
காண்பார்கள் - எழுசமுத்திரம்போல் பெரிதாகிய
சுகமென்றும், துன்பமென்றும், நாமென்றும், பிற
ரென்றும், பின்னமாகக்கருதி, இவைகளைமாறிச்செ
ய்யுங்காலத்தில் பரமசிவத்தின்மேல் வைப்பார்கள்-
என்க. மாறிச்செய்தலாவது-பிறர்தங்களுக்கு நன்
மைசெய்தல்பிறர்களுக்குத்தாங்கள்தீமைசெய்தல்.()

முளைபாதிசராசரமோர்முன்னிலையாலெழினு, மொ
ழிந்தவையோர்முன்னிலையாற் காக்கப்பட்டிடினு
ம், வளைகடல்சூழுலகினிலோருயிர்க்கோர் முன்னி
லைபான், மகிநாசம்வந்துறினு நாலபிறரான் மனத்
தா,லுளைவுறுமாமயக்குறினுமவைகளினுற்றெளிக*
லுற்றிடினுமுன்னிலையைச்சற்றெனினுமுன்னூர்.
தளையவிழும்பூங்கொன்றைச்சங்கரனுர்புரியுந்[வார்.
தண்ணளியைத்தொழிலென்றேயெண்ணிவியந்திடு

இதுவுமது.

(இ-ள்.) முளைமுதலாகிய சராசரங்கள் ஒருமுன்

ணிலையினால் உண்டானாலும், அன்றியும் அவைகள் ஒருமுன்னிலையாற் காக்கப்பட்டிருந்தாலும், வளர்ந்திராநின்ற சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலிருக்கும் ஒருயிருக்கு ஒருமுன்னிலையால் பொருந்திய அழிவு வந்தாலும், சாஸ்திரத்தினாலும், பிறராலும், மனத்தினாலும், வருந்தும்படியானமயக்கம் நேரிட்டாலும், அம்மூன்றினால் தெளிவைப்பொருந்தினாலும், ஒருமுன்னிலையைச் சிறிதுந்தருதார்கள் - இதழ்பல்மலர்த்த கொன்றைப் பூமாலையணிந்த பரமசிவம் நடத்துகின்ற தட்பமுள்ள திருவருளால் நடக்கும் பஞ்சகிருத்தியமென்றே கருதி ஆனந்தம் அடைவார்கள்—என்க. (சஅ)

பருத்தியசத்தின்மயிர்மண்பாடானதிகடாம்..... *
பரன்சிருட்டியவனருளாற்பகர்சீவஞ்சிருட்டி *
விரித்தபடங்கம்பளமட்கடஞ்சிகரிகோயில்......*
விளம்புமிவையாதிகளாமிவைபோலவுலக ... *
மருத்தியுடன்விளங்குறினுஞ் சீவர்கள்போன் மயங் *
கா, ரருள்விளையாட்டாதிவினைராதலிற்புற்புதமா*
புருக்கொளினுஞ்சிருட்டிதிதிசங்காரமுளவென் *
றுன்னிடுவார்துன்னிடுவாருயர்சுகவாரியதாய் *

இதுவுமது.

(இ-ள்.) பருத்தி ஆட்டின்மயிர் மண்பாஷாணம் இவைமுதலானவைகள் பரமசிவத்தின் சிருட்டியா

ம்- அப்பரமசிவத்தின் திருவருளால் ஜீவசிருட்டி யாதென்னில் விரித்தஆடை, கம்பளம், மட்கடப், கோபுரம், கோயில், முதலானவைகளாம். இவை போல உலகமானது ஆசையுடன் விளங்குமாறுவு ம் இவர்கள் மற்றச் சீவர்கள்போலமயங்கார்கள் -திருவருள் விளையாட்டாகவே நினைப்பார்கள் நீர்குமிழிகளாய் உருவங்கொண்டாலும் அவற்றிலும்சிருட்டி திதி சங்காரம் உள்ளனவென்று கருதுவார்கள் ஆகலால்இவர்கள் ஆனந்தவெள்ளமயமாயிருப்பார்கள்—என்க. (௪௬)

காமமுறின்மோகமும்லோபமுந்தோன்றுமந்தக் ✻
காமமறிலிரண்டுமறுங்காமமறுகலெயி.........✻
லேமமிகுங்கோபமுறமினனின்மதவயிர.... ...[ர்
மெழுமதநிலிவையறமென்றிச்சைசிறுஞ்சாரா
யாமறிவிங்கிவ்வறிவிலெழுமிவ்பமெமதென் [ணர்
றெண்ணிலிவார்மன்னவனியாமெமதென்மறண
சேமநிதியிறைவனவனிறைவியவளதுதான் .. ...✻
சித்சுகமென்றெண்ணிடுவார்நற்சுகபூரணமே ✻

இதுவுமது.

(இ-ள்.) ஒருபொருளில் இச்சைவைத்தால் மோகமும் லோபமுமுண்டாகும்- அந்த இச்சை அற்



உ

சிவமயம்.

# திருவாசகம்.

## சதகத்தில்

## ஆனந்தத்தழுந்தல்.

---

(எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.)

புணர்ப்ப தொக்க வெந்தை யென்னை யாண்டு
பூண நோக்கினாய், புணர்ப்ப தன்றி தென்ற போ
து நின்னொ டென்னொ டென்னதாம், புணர்ப்ப
தாக வன்றி தாக வன்பு நின்க ழற்க ணே, புணர்ப்ப
தாக வங்க ணாள புங்க மான போக மே.

இதற்குச் சிதம்பரசுவாமிகள் அருளிச்செய்த
பொருள்.

புணர்ப்பதொக்க,

ஆண்டவனோடு மாறுகொண்டுதிரிகின்ற வடி
மையானவனையந்த ஆண்டவன் சதுர்விதஉபாயங்க
ளினாலும் தன்னடிமையென்று தன்னோடுங்கூட்
டிக்கொள்வதொப்ப,

எந்தையென்னையாண்டு பூணநோக்கினாய்,

திருவடிக்கருகராகிய மெய்யடியார் குணங்க ளொன்றுமின்றிக் காமம்வெகுளி மயக்கங்களினால் பிரவஞ்சத்தை மெய்யென்று சுழக்கின்ற வென் னைக் கிருபையினாலே ஆசாரியமூர்த்தமா யெழு ந்தருளிவந்து தடுத்தாட்கொண்டு அம்மெய்யடியா ர்கணமேல் வைக்கும் கிருபாநோக்கத்தை யெந்தா யடியேன்போதத்துக் குள்ளும்புறனுமா யழுந்த வைத்தருளிச்செய்தாய்.

புணர்ப்பதன்றிதென்றபோது,

அரிபிரமாதிகட்கும் கிடையாதவிந்தக் கிருபா நோக்கம் ஒன்றுக்கும் பற்றாதவெனக்குக் கிடைப் பதன்றென்று கிருபையருமையையறிந்தபோது.

நின்னொடென்னொடென்னதாம்புணர்ப்பதாக,

என்னதாகியிருந்த சகசமலமொன்றும் நின்னோ டுமென்னை யிரண்டற்றவத்துவிதமாய்கூட்டுவதாக வும்.

அன்றிதாகவன்புநின்கழற்கணேபுணர்ப்பதாக,

முன்யானெனதாய்நின்ற பிரவஞ்சமான விது இப்போது யானெனதன்றாகவுமிப்பிரவஞ்சத்தின் மேனின்ற அன்பு சாமிக டிருவடிக்கண்ணே மீளாதுநிற்பதாகவுமாயின.

அங்கணாளபுங்கமானபோகமே,

அழகியகண்ணாளா அரிபிரமாதி போகங்களையுங் கடந்திருப்பதான சிவானந்தபோகமே— யிந்தக் காருணியத்துக்கு நாயேனாற்கைமாறு முண்டுகொலோ என்றவாறு.—ஆண்டுபூண நோக்கினாயென்றமையான்- புணர்ப்பதொக்கவென்றவுவமைக்கு ஆண்டவனடிமை வருவிக்கப்பட்டது. பூணநோக்குதல்- போதம்பதையாதுவைத்தநோக்கம் கிருபையருமையை யறிந்தபோது தற்செயல் முழுதுமிறந்து சிவத்தோடத்துவிதமானபடியினால்- நின்னோடு மென்னைப் புணர்ப்பதாகவென்றார். என்னோடுமென்ற மூன்றனுருபையென்னையென்னு மிரண்டனுருபாகக்கொள்க—உம்மைகளும் ஆயினவென்னும் ஆக்கமுந்தொக்குநின்றன.

குருகடாட்சம்-திருச்சிற்றம்பலம்.



